


திருச்சிற்றம்பலம்.

# திருவொற்றியூர்க்கலம்பகம்

இஃது,



அஷ்டாவதானம்

## பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,

இவர்மாணாக்கரும்

திருவதிகை - குமரானந்தசுவாமிகள்குமாரருமாகிய

சிவஞானவைதீகவாயுள்வைத்தியர்

## சி. கு. நடராஜமுதலியாரவர்களால்

சென்னை:

இந்துதியலாஜிகல்யந்திரசாலையிற்பதிப்பிக்கப்பட்டது.

கரவருடம் - கடகரவி.

1891

உ

சிவமயம்.

# சாத்துகவி.

இஃது

இந்நூலாசிரியர் போதகாசிரியராகிய

தசாவதானம்

## பேறை-செகநாதப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

வெளியான மருவுறையு மொற்றியூர்க் கலம்பகத்தை வாணி மெச்ச
மலவன தொடைபொருட்சொ லாதிசய வலங்கார மன்னிநிற்பப்
பொலிவான செந்தமிழ்ச்சே ரட்டாவ தானியெனப் பூவை வந்த
கலியாண சுந்தரநற் கவிராஜ சிங்கமது கழறிற் றம்மா !

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவொற்றியூர்க்கலம்பகம்

## காப்பு.

நேரிசைவெண்பா.

ஒற்றிக் கலம்பகத்தை யொண்சயிலை மங்கைபங்க
ரொற்றிக் கலம்பகத்தை யோதுதற்கிங் — கொற்றிக்
குணாலைய குஞ்சரனைக் கூறுசெய்த கொற்றக்
குணாலைய குஞ்சரனைக் கூறு.

## நால்வர்துதி.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவஞானக் கடலருணீர் நனிமடுத்தற் புகமின்னெற் றிறமாய்ச் செய்து
பவஞானப் புறச்சமய வெப்பமறச் சற்சைவப் பைங்கூ ழோங்க
நவஞானத் தமிழ்மறையா மழையதனை நானிலத்து நன்கு பெய்த
தவஞானக் கொண்டல்களா நால்வர் திருத் தாண்மலர்க டலைமேற் கொள்வாம்.

## நூல்.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு.

நாரணனார் தண்ணுமையி னாதவொலி யேகறங்க
வாரணனார் தாளத்தி னருமறைநூ லேபிறங்க
விந்திரனா ரெக்காள மெச்சரிக்கை யேயூதப்
பந்தியினிற் கந்திருவர் பல்லாண்டு பலவோதத்
தண்ணமுதத் திண்கிரணன் றனிக்கவிகை யேநிழற்ற
விண்ணுலக மங்கையர்கள் வியனாத்தி யேசுழற்ற
வடிவாம்பி கையுபய மலர்விழிக ளேகளிக்க
வடியார்க ளணுக்கனுற வரும்பவனி வருவோய்நீ.

# திருவொற்றியூர்க்கலம்பகம்.

## தாழிசைகள்.

அவனன்றி யோரணுவு மசைவுறா தெனுஞ்சொல்லை
யவனிமிசை காட்டுதற்கே யசைந்தாடி வருவீரால்
அவைக்கரினிற் கேசவன்ற னாகமதிற் றுயல்வரலைத்
துளக்குமுற வேயிங்குத் தோற்றிடவே வருவீரால்
ஆட்டுவிக்க லேயுலக மாடுமென்ற வுண்மையினைக்
காட்டுவிக்க வேசற்றுக் கனிக்கொசிந்து வருவீரால்
பேதைமுதற் பேரிளம்பெண் பெரிதுவந்து தாமயங்கி
காதலுற வழகதனை யணிந்திற்க வருவீரால்.

## அராகங்கள்.

பலகலை பயிலிய பணிமலை தருமகள்
வலமுறு மரிவையு மகிழ்கொளு முடலினை
அரவணி கணபதி பயில்புனை முருகைய
னுரமுறு மிணைதர வுவகைகொ ளுருவினை
அரியய னிருவரு மயர்தர நடுவினி
லெரியென நனலென வுயர்தரு தனுவினை
எவரெவ ரெவணெவ ணிலதுகரு துதரவ
ரவரவர் மனமுற முழுகிய வடிவினை.

## பெயர்த்துந்தாழிசைகள்.

மந்தரத்தி னொருகண் மணிபதிக்கா யென்பாது
னிசைவளர் சாந்தனை யியற்றுகிறு விளையாட்டே
கைலாயத்தின் முதுகோட்டைக் குழிக்கெடுத்தா யென்பாதுஞ்
சிலைமேரு வளைதாகச் செய்கிறு விளையாட்டே
வராகத்தின் வயமாய மருப்பொடிக்கா யென்பாதுன்
பராகநறும் பூங்கடம்பர் பழகுசிறு விளையாட்டே
நரசிங்க மதனையினை நைத்தரிக்கா யென்பாதுன்
வாயீர பத்திரனார் வகுத்தசிறு விளையாட்டே
வாமனனார் கங்காளம் வாங்கினை யென்பாதுன்
காயாரணி வயிரவனார் கண்டசிறு விளையாட்டே
மற்றவதா ரத்தினருள் வழங்கினை யென்பாவை
முற்றுமின்றன் றொண்டர்பற்று முனிவர்தன் விளையாட்டே.

### நாற்சீரோரடியம்போதரங்கம்.

அகளச் சகள வுருவுரு மேவினை
சகல சமய சமரச மாயினை
துகளில் சுருதி துரியம வாவினை
இகழூ மிதய சினகா றாயினை.

### முச்சீரோரடியம்போதரங்கம்.

தமனிய மலைதனை வளைத்தனை
கருதிய துகயிலை கிளைத்தனை
சமயமு மறைவகை படித்தனை
கருதிரு வெனநட நடித்தனை.

### இருசீரோரடியம்போதரங்கம்.

அக்கர நாட்டினை - சக்கர நீட்டினை
யருளது கொடுத்தனை - மருளது தடுத்தனை
யரியுரி விசிக்கினை - நரிபரி யாக்கினை
வெற்றியூர் சேவினை - யொற்றியூர் மேவினை

ஆதலால் - தனிச்சொல்.

### நிலைமண்டிலவாசிரியச்சுரிதகம்.

பஃறலைப் பணைப்பாய்ப் பள்ளிகொண் டோனுஞ்
சிஃறலைப் போதனுஞ் சேவித் திறைஞ்சச்
சீர்வள ரொற்றிச் சினகரந் தன்னிற்
பேர்வளர் பவனி பிறங்குதியா கேச
வாண்டு பலவா யகில மதனி
லீண்டு தமியேன் வேண்டுவ திலவே

அதைதாங்

கொச்சைச் சமயர் குலவிப் பணியும்
பிச்சைப் பசுக்களைப் பேணு தியங்கிச்
செத்துப் பிறக்குந் தேவர் தம்மை
யெத்தரு ணத்தினு மெண்ணு திருந்தா
நாத்திகஞ் சொல்லி நலியு மூடரை
நேத்திரத் தானு நேரா தவிர்ந்திட்
டகம்பிர மம்மெனு மறிவில் லோரைச்

செகமதி லெளியேன் சேரா தொழிந்திட்
"டோரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரோ" வென்ன
வுண்மை பேசி யொண்சிவ் மீதென
வண்மையுாய்க் காட்டிய வாத்தர் முதலா
நின்னடி தன்னை நினைக்கும் பெரியோர்
தன்னடி யென்றன் றலையிற் சூட்டி
யிறுமாந் திருக்கு மிழுக்கில் வாழ்வைப்
பெறுமா றருள்க பெருவிபூ தியனே. (க)

நேரிசைவெண்பா.

பூதிருத்தி ராக்கப் பொருள்களேயே செல்வமெனு
மாதிபுரி யாலுறவர்பா லாக்கியெனை — மேதினியின்
மேனோக்கி வேடமிடு மேனியராம் பேதையர்தம்
பானோக்கி வாழாது பண். (உ)

கட்டளைக்கலித்துறை.

பண்ணுவ துஞ்சிவ சங்கரன் றொண்டர் பணித்தொழிலியா
னெண்ணுவ துங்கண்ணன் காணாத பொன்னடி யின்புகழா
மண்ணுவ தும்பிற வித்துய ரீயு மலமொரைந்தா
நண்ணுவ தென்னினைவைக் காமுத லாமொற்றி நற்பதியே. (ங)

கலிநிலைத்துறை.

பதியே யிழந்து பவமே நினைந்து பலவாகச்
சதியே புரிந்து சகமே வதிந்து தளர்வீர்காள்
சுதியே மிகுந்து துதியே பரந்த சுடரொற்றிப்
பொதியே யணைந்து நிதமே பணிந்து பொலிவீரோ. (௪)

கலிநிலைவண்ணத்துறை.

தனதத்தத் தனதத்தத் தனதத்தத் தனதத்தத் தனதானா.
பொலிவற்றுத் தினமற்பக் கலைகற்றுத் தெருளற்றுப் பொருண்மாலே
சொலிவைத்துப் புகழ்கெட்டுப் புவனத்திற் றளர்வுற்றுச் சுழலாமே
புலியக்கத் ததளேச்சுற் றரைபொற்பத் திருவொற்றிப் புணர்வார்பா
லொலிமுற்றுத் துதிசொற்றுக்கதிபெற்றுப்பயன்மிக்குற் றுயர்வாயே.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உயர்வளைக்குழையும்விளங்குசெஞ்சடையு மோங்குவெண்ணீறுறுவடிவும்
புயன்மிகநாணவருள்பொழிவிழியும் பொங்கரவப்பணிப் பொலிவுந்
துயரறு புலியி னதள்செறி யிடையுந் துணையடிக் கமலமுமறவே
னயரறுத் தெனையா ளொற்றியூர்மேவு மமலனேயாதிநாயகனே. (சு)

## புயவகுப்பு.

பதினறுகலைவண்ணப்பா.

தானன தனதான தானன தனதான
தானன தனதான தத்தத் தனந்தன.

ஆதிநா யகிவேத போதநா யகிபாதி
யாகநா யகியாக வைத்துப் பொருந்தின
வாவலா யிழையோக சாதன தியர்சேரு
மாணியா டகமேரு விற்பெற் றிருந்தன
வாழிமீ தெழுமால காலமே யமுதாக
வாதிநா னுமாறு நத்திச் செறிந்தன
வாள்கணீ யடியேனை யாள்கவீ யெனுமால்கை
யாளமா நவிராழி யைத்தொட் டெழுந்தன (சுவ)

வேதமோ திடுவேத னீடுசே கரனோவ
வீறுமோ டுறுமாலெ டுத்துப் பொலிந்தன
வேழமா முகனோடு வேலுலா மொருசேயும்
வீரமார் புறுமார்பணைத்துச் சிறந்தன
மீறுமா தவவேட னோடுபோர் கொடுவீர
வேகநீ ளொருகோல்கொ டுக்கத் துணிந்தன
வேள்விசா லையினூடு லாவுபா னுவைமோதி
வீறுசேர் புகழ்மேவி மெச்சத் திகழ்ந்தன (சுஉ)

பேதனீ டுடல்கீறு மேறனு னிறுமாறு
பேதமா லறவேகி ழித்துப் பிறங்கின
பீடுலா முழையோடு நீடுமா ரழல்வாகை
பேறுசா லுறுசூல நிற்கத் திகழ்ந்தன
பேணுநால் வர்கடேற நீழல்வாய் பொருள்கூறு
பேசொணு மொழிநேர்கு றித்துப் பகர்ந்தன
பேழ்கொண்மூ வர்கனோடு நாசமா கிடதாசர்
பேசுமால் கணையோடு றழ்த்துத் திணிந்தன (சுஙு)

சீதைநா யகனேறு சேனம்வா டுறுமாறு
சீறுநீ ளரவார்தொ டிச்சுற் றியங்கின
சேணிலா வியதேவர் பூமிமே லுயர்வாழ்வு
சேரவே யிருசீர்த ழைக்கப் புரிந்தன
தீனனு மெளியேனு ஞானமே பெறுமாறு
தீமையா னவையுமே துடைக்கப் பரிந்தன
தேனறு மலர்வாவி நீடுமா திபுரீசர்
சீருலா வியமாதி ரப்பொற் புயங்களே. (எ)

### மேகவிடுதூது.

நேரிசைவெண்பா.

புயலேநீ செஃறிசையிற் பொற்பார்ந்த வாரிக்
கயலே யடர்ந்திட்ட வண்ணல்—செயலதனை
யொற்றியூ ரிற்கண்டே னூழ்வினையைச் செப்பியுன்றன்
பெற்றியினைச் செய்வாய் பெரிது. (அ)

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பெருகுசராசரமனைத்துஞ்சிவகணங்களாய்விளங்கும்பெட்புவாய்ந்த
மருவுதிரு வொற்றியூ ரெல்லையினை யேயடைந்து வாழ்ந்த பின்ன
ரொருவருநல் லாநந்தம்விளைவிக்கு மொருமுத்தியுண்மை யென்னுங்
கருகுபல நரகங்க ளுளவென்று மாராய்தல் கதைய தாமே. (௯)

### கட்டளைக்கலித்துறை.

தாயக மாகி யமரரைக் காக்குந் தனிமுதல்வ
னாயக மாய்முத் தொழிலினைச் செய்து நடிக்கின்றவன்
சாயக மாயரி தன்னைக் கரத்திற் சமைத்திட்டவன்
மீயக மாகுந் திருவொற்றி யூரில் விளங்கினனே. (௧௦)

### மடக்கு.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விளங்கு மென்மா சடையானே வீறுமலமா சடையானே
வியனூ ரனற்கோ வுடையானே விழையும்வனக்கோ வுடையானே
துளங்கும் பணிலக் குழையானே துன்னுங் கரத்திற் குழையானே
தோன்று மம்மைக் களத்தானே தொடியா ரம்மைக் களத்தானே

தளங்கொடாமத் தொடையானே தாவு மரவத் தொடையானே
தாக்கி னுரிவை யுடையானே தரும வரிவை யுடையானே
களங்கொள் வீரக் கழலானே நன்மெய்யொளிர்பொங்கழலானே
நாடு மாதி புரியானே நண்ணு மிழைமுப் புரியானே. (கசு)

இரங்கல் - வெண்பா.

புரிந்தமென்மஞ் சத்திநறும் பூவணையிற் றூங்காள்
பரிந்தூட்டும் பாலுணவைப் பாராள்—விரிந்தவிதழ்த்
தேன்கொன்றை மாலையையே தேடியொற்றி யூரனிற்
றான்செய்வா டொண்டாந் தவம். (கஎ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தவசிவக்குந் திருவொற்றித் தனிமுதலேயன்றுதில்லைதன்னிற்சார்ந்து
சிவசிவென முழங்குறுமத்தளத்தவரு லுதையுண்டு சீவன் போன
சவமெனவீழ்ந் தின்றளவுங் கிடக்குமா லைச்சிலர்தஞ் சாமி யென்ன
நவமுறுத்திப் பணிவதுமே னலிவதனுக் கேதுமென நவில லாமோ.

கலித்துறை.

ஆமே புகழும் பொருளு மரிய வருளியல்பு
நாமே புரியும் பிழையும் பிணியு நடலைகளும்
போமே சுமைவிட் டருகி யடரும் பொழிலிடையே
தேமே கமழும் பிரம புரத்தினைச் சென்றிடினே. (ககூ)

கட்டளைக்கலித்துறை.

சென்றார் திருவொற்றி யூரினை நாடித் தினந்தினமு
நின்றார் படம்பக்க நாதர் சரணை நினைந்துருகித்
தின்றார் சிவானந்த போதத் திரளிற் றிகழமுதை
வென்றார் பெரியவர் தென்றிசை யோன்செயும் வேதனையே.

தாழிசை.

வேதனோட வெள்ளைமேனி யாளுமோட விண்ணவர்
வேந்தனோட விந்திராணி வெருவியோட விண்டிகழ்
சீதனோட வெம்பிறதிர்ந்து தினனுமோட மகிடமூர்
தென்னனோட விவனவாவு தேவியோட விண்டெனுந்
தாதனோட மலரின்மாது தானுமோட விரதியுந்
தவறியோட வேனிலாளி தாவியோட வுரகர்க
ணாதனோட யாகசுத்த னவிரமோட வெற்றியா
ஞந்தகந்த டக்கைகொண்ட நல்லவொற்றி நம்பனை. (கசா)

### கலிவிருத்தம்.

நம்பக லின்க ணனிவெயில் வெள்ளை
யம்புலி யின்க ணளியெழு நாவில்
வெம்புந் தணலுற வீறுசெய் விக்கு
நம்ப னொற்றியூர் நாயக னாட்டமே. (கஎ)

## அம்மானை.

### மடக்குந்தாழிசை.

நாட்டும் புகழ்வாய்ந்த நம்பலகை நாதனார்
கூட்டிவைக் குந்தூது கொண்டனர்கா ணம்மானை
கூட்டிவைக் குந்தூது கொண்டனரே யாமாயி
னோட்டினர்க ளெல்லா நகையாரோ வம்மானை
நகைப்பவென வூரொற்றி நண்ணினர்கா ணம்மானை. (கஅ)

### இஃதுமஃது.

அங்கணொற்றி நாத ரமன்மான் முடிநலங்
கங்கல் பிறைகங் கனைத்தரித்தா ரம்மானை
கங்கல் பிறைாங் கனைத்தரித்தா ராமாயி
னங்க மறிவரியா ராவரோ வம்மானை
யங்கம் பலகையுரு வல்லவோ வம்மானை. (ககூ)

### பாங்கிதலைவிக்குரைத்தல்.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

அம்மானை யெய்திரித்தோ னானேதா னதுபோனவடைவேதென்பார்
கைம்மாவொன் றின்வழியே குறிதப்பிவந்ததுண்டோ கழறுமென்பா
ரிம்மாவின் றனைமபாரி ரின்றிதென்பா ரோந்திழையே யெழிலாரொற்றிப்
பெம்மானை யறியேனா மிவரெண்ண மென்னேயோ பேசுங் காலே.

## மடக்கு.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காலனை யுதைத்ததுங் கழலேயாங் காமனை யெரித்ததுங் கழலேயாம்
வேலனை யீன்றதுங் கண்ணேயா மீப்பவம் வேயின் கண்ணேயாம்
பாலனுக் கீந்ததும் பாலேயாம் பார்வதிக் கீந்ததும் பாலேயா
மாலயன் போற்றிடும் பதியீரே மகிழு மொற்றிப் பதியீரே. (உக)

## தவம்.

### கலிநிலைத்துறை.

பதிபல வோடிப் பாவையி லாடிப் பகலிரவாய்
நதியவை நாடி நளிர்வனை கூடி நலிவீர்காள்
மதிநிறை வேணி மழுவணி பாணி மாதேவன்
வதிதரு மொற்றி கதியெனப்பற்றி வாழ்வீரே. (உஉ)

## பூவைவிடுதூது.

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வாழிசைந்திட வாய்தி றந்தொரு வார்த்தை பேசுதி பூவையே
தாழியைந்திட நானி ருப்பது தருமமோ வுனக்கழகதோ
பேழியங்கிடு மொற்றி யூரினிற் பேதைநானெழு நாளினே
யேழியாண்டென வெண்ணியேங்கலை யிறைவர்பாலினி தறைவையே

## குறம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறைகுவேன்பலகுறியுங்கண்முன்னேகண்டதுபோலஞ்சவேண்டாங்
தறைமெழுகிக்கோலமிட்டுநெற்குவித்திட்டதன்மீதிற்சமைத்தசெம்பிங்
குறைவதுடனோர்பிடிநெல்லொற்றைபட்டதாதலினுலொற்றியூர்வாழ்
பிறைமுடியர்வந்திடுவர்பெரியபணம்பழஞ்சீலைபெய்வாய்நீயே. (உச)

## தலைவியைக்காண்டல்.

### கட்டளைக்கலித்துறை.

பெய்வளை மாதர்க ளாயத்தை நீங்கிப் பிறைப்பணிலஞ்
செய்வழி யோடுந் திருவொற்றி யூர்நற் செழும்பொழிலு
ளெய்யிடை மேலிரு பாரத் தனமலை நோயியற்று
மெய்யிழைப் பாறத் தனித்துநின் றாய்கொலென் மெல்லியலே.

## கலிநிலைவண்ணத்துறை.

தனனதன தனனதன தனனதன தனனதன தந்ததானனு.

இயமடர வசமழிய நமபடர்கள் வருபெரிய வெச்சமாயுமே
பயமொழிய மனமதனி லளவில்பல கருணைவளர் பத்திநீடுமே
முயலமர ரரியயர்க ளறிவரிய வடியர்புகழ் முத்திகூடுமே
யுயர்பலகை வடிவமது கொளுநமதுபரமர்மகிழொற்றியூரிலே. (உரு)

## களி.

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊரியினை யூடுருவி யோங்குஞ் சோலை
யொற்றியூர் மகிழ்கள்ளை யுண்டு தேக்குஞ்
சீரியோர் புகழ்களியேஞ் செப்பு முண்மை
சிறிதேனும் பிழையாது செவ்வே கேண்மோ
வேரியிற்சங் கரியைக்கோ பாலர் சேர்ந்து
வெள்ளைவா ரணனைப்பெற் றுவந்து நின்றார்
நாரிசீ தேவிதார் வாச வன்ற
னற்றோளைச் சேர்த்தணைய நாடினளால் (உஎ)

### தலைவிமென்மைத்தன்மைக்கிரங்கல்.

நேரிசைவெண்பா.

நாடிநெடி யோன்பணியு நம்பரொற்றி யூரதனிற்
பாடியளி மூசுகுழற் பாவையெனைத்—தேடிடுமே
பாலைவனை யோடிப் படருகையின் மென்றளிர்நேர்
காலைமுட் டைத்திட்டக் கால். (௨௮)

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காலங் கடந்த பிறைச்சடையுங் கவினார் நீற்றுப் புண்டரமுங்
கருணைநிறைந்தமுக்கண்ணுங்கதிர்கொள்வெள்ளைச்செவிக்குழையு
மாலை படர்ந்த கறைமிடறு மணிநீள் கொன்றை மாலிகையு
மழகார் புலியி னதளிடையு மரியின் விழிசேர் கழலடியுந்
தாலமுதவு மலைமடந்தை தனயரிருவர் தம்முடனே
தரும விடையின் மேலேறித் தயவாய்வருநற் காட்சியுமே
சால வடியார் தம்முடனே தரிசித்துய்ந்திங் கருள்பெறலாஞ்
சாயுச்சிக் கதியருளச் சமைந்த வொற்றிப் பதிதனிலே. (௨௯)

### மறம்.

தாழிசை.

இல்லடுத்துப் பெண்கேட்க விங்குவந்த தூதநீ
யெங்கண்மர பின்பெருமை யெள்ளளவு மோர்ந்திலாய்
செல்லடுத்த சோலையொற்றிச் சிவனருடன் மைந்தனுக்குச்
சிறுமிகொள்ளப் பட்டபாடு தெய்வந்தா னறியுமே
வில்லெடுத்த கொற்றவன்றன் விட்டவோலை கொண்டுபோ
விருதுபேசி வந்தமன்னர் முடியுதிர்ந்த மணிகளே
கல்லெடுத்துக் கிளிகடியு மெங்கள்சேயிழைடலாங்
கருணையற்ற பேரைநாங் கடிந்துவக்கு மறவரோ (௩௦)

### தலைவியைவியந்தல்.

கட்டளைக்கலித்துறை.

மறங்கொண்ட வந்தக னாணையைச் சற்று மதிக்கிலதே
புறங்கொண்ட மேட்டுநற யாதி புரியின் பொழிலதனு
ணிறங்கொண்ட மாந்தளிர் மேனியள் வேல்புரை நீள்விழிகள்
திறங்கொண்ட வெங்கடுக் கக்காது தேனைச் செவச்சொரிந்தே.

### இரங்கல் - கொச்சகம்.

சொரிந்திட்ட மலர்ப்பொழிலுட் சூழ்ந்திட்ட வாவியெலா
நெரிந்திட்ட மணங்கமழு நிறையொற்றி யூர்நாட்டில்
விரிந்திட்ட பெருங்கடலே மெய்வளையே சம்புள்ளே
பிரிந்திட்ட வென்றலைவன் பெயர்ந்ததிசை பேசுவீரோ. (௩௨)

### நேரிசைவெண்பா.

பேசரிய ஞானமருள் பெண்பாக னொற்றியூர்
வாசமலி தண்டலையில் வாழ்வுற்றே—னேசக்
கரும்புருவக் காரிகையைக் காண்டிருவை நேர்ந்த
கரும்புருவக் காரிகையைக் கண்டு. (௩௩)

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கண்டு நின்றனை யைம்புல னேமகிழ் காமக் கைதவத்தில்
தொண்டு செய்கிலை யொற்றி யூர்வளர் தொன்மை யடியவர்பால்
விண்டு பேசிலை நால்வ ரின்புகழ் வியந்து நாடோறுங்
கொண்டு போதர வென்ன வோதடை கொடிய கூற்றுவற்கே. (௩௪)

## தவம்.

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வற்கலை கொண்டும் வலியவர் தண்டும்
வன்சரு குண்டும் வளியது தின்றுங்
கற்களி லென்றுங் கனலிடை நின்றுங்
கனபசி விண்டுங் கதிபெற லில்லையா
னற்கலை தேர்ந்த வொற்றியை யார்ந்து
நவமனை வேய்ந்து மனைவியை வாய்ந்து
பொற்பணி சார்ந்து மகவுடன் வாழ்ந்தும்
புகழ்தரு சிவகதி நிகழ்வது நிசமே. (௩௫)

### நேரிசைவெண்பா.

நிசவடிய ராகல்லார் நேயத்தைக் கொண்டு
கிசவடிய ராகல்லார் கேண்மை—வசையொழித்துப்
போற்றுவார் தம்பாற் புகழ்கல்வி பொன்னுதி
யாற்றுவா ரொற்றியப்ப னூர். (௩௬)

## சித்து.

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆர்ந்திட்ட வொற்றியூர்த் தியாகேச ரடியவரி னடிமை யாகி
யாயிரமா யிரமாக வித்தைகற்ற சித்தரியாமறிவின் மிக்கீர்
சார்ந்திட்ட கழுநீருட் காரடகேயானுலுந் தயவாயீந்தாற் [வைப்பே
றங்குமனை பொன்னியங்கச் சுவர்யாவும் வெள்ளியதாச் சமைத்து
நேர்ந்திட்ட விரும்பைபா கத்தைமா தங்கமா நிலவச்செய்வே
நிகழ்ந்தமாதங்கத்திலிருப்பைக்கண் ணுதலார்க்கு நிதங்காண்பிப்பே
மோர்ந்திட்டவெள்ளிவரின்முன்னம்பொன்னென்றுரைத்திங்குறுதிசொல்வே
னுற்றநவலோகங்களொன்றையொன்றாய்ச்செய்வேனுண்மைதானே.

### கிளவிவேட்டல்.

#### கட்டளைக்கலித்துறை.

தானே தனக்கு நிகரான வொற்றித் தலவரையில்
வானே பொருவு நினதிடை கொங்கைகள் வாள்விழிகள்
தேனே யுகுக்குங் கொடியோ குவடோ தெறுங்கணையோ
மானே திருவாய் மலர்ந்திட வேண்டு மகிழுறவே. (௩அ)

### இரங்கல்.

#### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகிழு மொற்றித் தனிநகரில் மகிழ்கோ டரத்தி லினிதமர்ந்து
புகழுங் கிளியே பூங்குயிலே புகர்சா ரிகையே பொன்வண்டே
நிகழுந் தென்ற னிவர்வாடை நிலையில் பருவங் கார்ராதி
தகவாய் வந்து தாண்டினவே தலைவர் வரவே கண்டிலனே. (௩௯)

### கைக்கிளை.

#### மருட்பா.

இலதுளதா மின்னிடையி னேய்கலைமா சுண்ண
மலர்புலா மாவுரா வாழ்தா—னிலமடையக்
கண்ணுற நின்ற கருங்குழற் காரிகை
கண்ணன் காணரு மொற்றியின்
மண்மக ளென்றே மதித்திடு வாமே. (௪0)

### வஞ்சிவிருத்தம்

வாம மேவு மனையுட
னீம நாடி யிருளினில்
வீம வாடல் விழைபவ
ராம வாதி புரியரோ. (௪௧)

### கட்டளைக்கலித்துறை.

புரியா ரனந்தன் பிரமனு நாடிப் புகலுதற்குத்
தெரியாத தத்துவன் றெண்ணீர்க் கடல்சூழ் திருவொற்றியாம்
புரியா னருள்வடி வாம்பிகை யுன்னுநற் பூவையளுக்
குரியானென் றேத்துவர்க் கேதந் தருள்வ னுயர்பதியே. (சஉ)

### எண்சீர்ச்சந்தவிருத்தம்.

*தனதன தனதன தனதன தனனா.*

பதியிது வதுவென வலமரு மனமே
பழமறை முடிவினி லினிதொளிர் பவதாய்
விதியரி யிருவரு மிகலுற நடுவே
வியனழ லுருவென நிலவிய பொருளாய்
வதிதரு மமரர்க ளினிதுயு றவருளான்
மணிமிட றதின்விட நிறுவிய பெரியோன்
மதிமுடி மனைகெழு பிரமபு ரியின்வாழ்
மகிழடி வதிதரு மொருபெரு முதலே. (சங)

### அறுசீர்ச்சந்தவிருத்தம்.

*தனதன தனதன தய்யன தய்யன தனதன தனதனனா.*

முதலிடை கடையள வில்லவ ருள்ளவர் முழுவது நிறைபவரா
மிதமுறு மிசைவளர் தையலை மெய்யினி லியலுட னணைபவரா
நுதலினி லொருசுத னிவ்வுல குய்வகை நொடியினி லருள்பவராம்
விதபிர மபுரியி னல்லவர் நள்ளிட விழைவுட னுறைபவரே. (சச)

### நேரிசைவெண்பா.

உறைகுநர்க்கு முன்னுநர்க்கு மோர்பேர்த்து வாளா
யறைகுநர்க்கு மெல்லாமுண் டாகி—நிறைதருமே
யாதிபுரி யூரினையு மாம்பலகை நாதனையுங்
கோதிலகத் தேகிநீஇக் கொண்டு. (சரு)

### நற்றாய்கூறல்.

*கட்டளைக்கலித்துறை.*

கொண்டனை மாலினைச் சற்று நினைப்பின்றிக் கொண்டறவழ்
தண்டலை யாரொற்றிப் பித்தன் செயலினைச் சாற்றுவன்கேள்
வெண்டலை சூடுவ னீமத்தி லர்டுவன் மென்சிரசிற்
பெண்டினைத் தாங்குவன் பேய்களொ டோங்குவன் பேதையனே.

ஊசல்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேதமறு மனமதனைப் பலகை கூட்டிப்
பிறங்குநால் வாக்குச்சங் கிலிகள் பூட்டிப்
போதபசுத் தத்துவவுத் தரத்தின் மாட்டிப்
புகழுறுமெய்ஞ் ஞானக்கம் பளத்தை நீட்டி
மேதகுக லோபதா னத்தைச் சூட்டி
விளங்குதவி சிடையைந்து தொழிலுஞ் செய்வா
ளுதவடி வாம்பிகையோ டாடிரூச
னவிலொற்றித் தியாகரே யாடிரூசல். (சஎ)

கட்டளைக்கலித்துறை.

சல்லிய சாலந் தழைத்திடு மொற்றித் தனிநகரிற்
சல்லிய மாலை தரித்தழ கார்ந்திடுஞ் சங்கரனார்
சல்லிய மொற்றினைக் கானத்திற் கண்டு தனஞ்சயற்காச்
சல்லிய மோச்சிக லத்திர மீந்த தயைக்கடலே. (சஅ)

தழை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கடலனையகருங்கண்ணுண்மாந்தழையையடைந்தவுடனகாமனம்பா
லுடல்பொதிந்தபுண்ணொழிந்தாள்மதிகாய்ந்தகூடொழிந்தாளுற்றமம்ம
ரிடரொழிந்தாள்குளிர்வாடையிகலொழிந்தாளெழுத்தறியுமெம்மானென்று
நடமருவுமொற்றிநகர்மகிழ்தலைபோற்றழைத்திட்டாணவைதீர்ந்தோமே.

கலிநிலைத்துறை.

தோமிருக்கும்புன்கும்மை கலகலத்துத் தொலைந்திடுநாடோன்மறைக
டாமிருக்கும் விண்டளித்த விழியிருக்கும் விண்ணுலகத் தானவர்கள்
தேமிருக்கு மாலைகளின் மணமிருக்குஞ் சுகமிருக்குந் திருவடியி
னமிருக்கும் படிசெய்வா னொற்றியினி லேயிருக்கு நம்பன்றானே.

நேரிசைச்சிந்தியல்வெண்பா.

நம்மையா ளாதிபுரி நற்பலகை யானாகிதஞ்
செம்மையுட னேத்தித் தெரிசிக்கி—னிம்மையிலு
மம்மையிலு முண்டவன்று னன்பு. (ருக)

உயிர்வருக்கையகவல்.

அன்பே வடிவா யமர்கா வரசும்
ஆரூர் பரவை யரிவை மணாளனும்

இசைகொள் காழி யிடத்துக் கிழவனும்
ஈங்கரு ணைக்கட லாமா ணிக்கமும்
உரைத்த தமிழுக் கோடி யோடி
ஊதிய மீந்தவை யோதி யுணர்ந்ததால்
எழுத்தறி பெம்மா னென்ற பெயரை
ஏய்ந்தனை நெற்றி யெம்மா னதலின்
ஐம்புலன் றன்னை யடக்கவும் வேண்டாம்
ஒன்றிய வுடலை யொடுக்கவும் வேண்டாம்
ஓதிடி லொண்டமிழ் மறைகளை
ஔவிய மற்றவீ டடைத றிண்ணமே. (௫௨)

## மதங்கியார்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திண்கயத்தினொருதுளிநீ ரருளளிக்குந் திருவொற்றித்தெய்வநாட்டிற்
பண்கனிய மனங்கனியப் பாட்டிசைக்கு மதங்கியெனும் பாவையாரோ
கண்களெனுங் கடுவாளாற் காளைகளைக் கடிதீர்த்துக்கலங்கச்செய்தும்
வண்கரத்தில் வாளொளிர வாள்களினை வாளாக வழங்க லென்னே.

## மடக்கு.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்பிணி வாதனை மாற்றுவனே யேமன் றனக்கு மாற்றுவனே
யென்பின் மாலை புரிப்பவனே யெளியாரிடர்வெப் பரிப்பவனே
வன்பருளத்திற் கரியானே மாலயன் போரிற் கரியானே
யன்பர் வாழும் விருப்பினனே யாதிபுரிசெவ் விருப்பினனே. (௫௪)

## இளவேனிற்காலம்.

### தாழிசை.

விரும்புதமி ழுடன்கலந்து தென்றல்வருங் காலம்
விரிசோலை மிகச்செழித்து விளங்குகின்ற காலங்
குரும்பைமுலை மாதர்மணங் கொண்டுவக்குங் காலங்
கொழிசித்திரை வைகாசி கூடியதோர் கால
மரும்புகளைத் தூணியிடை மதன்றுறுத்துங் காலம
ஆஆவென் மீதாங்க னலர்தூற்றுங் காலம்
பெரும்புவன மும்போற்றுந் திருவொற்றி யூரிற் .
பெம்மானென் னாயகனைப் பிரிந்திருக்குங் காலம். (௫௫)

தலைவனிடத்தலைவிவருந்தல்.

கட்டளைக்கலித்துறை.

காலங் கடந்தவர் மாலயன் மீதிற் கருணைவைத்த
வால மிடற்றின ரொற்றியி னண்ண லணங்கனவ
னீலங் கொடுத்திடி லாற்றேனென் றோதி நிசிபகலா
யோல மிடுமேவற் கருள்செய்வ தெக்கண முள்ளுவந்தே. (௫௬)

வஞ்சிவிருத்தம்.

தேனுந்து மொழியுமைபாஞ் செல்விமகிழ்
மானுந்து காதலத்து வாணருறை
வானுந்து பொழிலொற்றி வாழ்வீரோ
யூனுந்து பல்பிறவி யொழிவீரோ. (௫௭)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வீரையினிற் படுத்துறங்கு நாரணற்கு மாரணற்கும்விண்ணின்மேயுங்
காரையிவ ரிந்திரற்குங் கிட்டாத வொருபதவி காணலாமே [வாழு
நீரையருஞ் சடைக்கணிந்த வெம்பெருமான் சிவபெருமா னிலையாய்
மாளாயினின்மருவியுறைந்தமொற்றிநகரென்றொருகாலறைந்தபோதே.

பாண்.

இஃதுமஃது.

அறையுகந்த சந்தியங்க டயிர்ச்சாத மாக்கொண்டோ ரதரத்துற்ற
நறையுகந்தா ரிணையுகந்தா ரெனப்பாடும் யாழ்ப்பாண நன்கு நன்கு
தறையுகந்த வொற்றியனை நான்மறைவா னேயமதைத் தாமே தேர்வார்
நிறையுகந்த வவர்பாலீற் பண்ணிசைத்துப் பரிசுபல நேர்தனன்றே.

கோச்சகம்.

நன்றனைத்துஞ் செய்வார்க்கு நவநிதிய மீந்திடுவாய்
கொன்றருந்தும் பாவிகட்குக் குலநமனாய் நின்றிடுவாய்
குன்றனைய கோபுரங்கள் குலவுதிரு வொற்றியினி
லொன்றியுறை தியாகேச வுயர்தெய்வ மாமணியே. (௬௦)

நேரிசைவெண்பா.

மணிதுதையுங் கோயில்பல மன்னுமொற்றி யூரிற்
பணிதுதையுஞ் சங்கரனார் பாதத்—தணியதனைச்
செவ்வையுறக் கண்களினாற் றேர்ந்துதெரி சித்தவர்க
ளெவ்வுலகி லாராரொன் றாம். (௬௧)

ஆசிரியத்தாழிசை.

என்றுஞ் சென்று மிமையவரு முச்சியா
ரின்றுந் துன்று மெழின்மகி ழொற்றியூ
ரொன்றும் பொன்று முயிரடர் மிச்சையே. (சுஉ)

கட்டளைக்கலித்துறை.

சையவில் லார்ந்த திருவொற்றி நாதர் தனதுதிருப்
பையிதழ் வாய்ந்த மலர்க்கொன்றை யுற்றனன் பாழ்மதனப்
பையலென் செய்வ னடவா தினியவன் பாணவிற்போ
ரையல ராசுகந் தூணிவைத் தேக லழகுடைத்தே. (சுங)

பிச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குச்சுமலி குறிஞ்சியர்கோன் வேலிரண்டுஞ் சொந்தமெனக் கொண்டு வாழ்ந்து
மச்சுமலி மாடமா ளிகைபரவு மொற்றிநகர் மன்னி நின்ற
பிச்சுமலி வார்படையு மேந்தியவர் வேடங்கொள் பிச்சியாரோ
யச்சுமலி விடர்களிலார் குடிகெடுக்க வாண்டிச்சி யாகினீரோ. (சுச)

நேரிசைவெண்பா.

நீருலவு தாமரைமே னீடருசெவ் வண்டமைந்த
சீருலவு காட்சியினைச் செய்ததே—காருலவு
மோதைமலி யொற்றியிறை யொண்சரணில் விண்டுவிழிப்
போதையருச் சித்திட்ட போது (சுரு)

கட்டளைக்கலித்துறை.

போதகத் தோனும் புனறுயின் றோனும் புரந்தரனு
மோதக மின்றிப் பலபல காலந் துணைவியரிற்
சாதக மாகத் திருவைந் தெழுத்துண்மை சாற்றவவ
ரோதகந் தன்னி லுதித்தன னொற்றி யொருமுதலே. (சுசு)

எழுகூற்றிருக்கை.

நிலைமண்டிலவகவல்.

ஒருபசு பதியா முயர்பெருந் தேவா
வொருமை மனத்து ளுகந்தே மருவினை
யிருக்கையோர்ந் தன்பிலா ரோத்த வொருவினை
யீருரி பொதிந்தனை மூவிலை பரித்தனை
யிருத்தினை பனையை யோர்பாற் றழீஇக்
கற்றோ ராரக் கயிலை யிருந்தனை

புற்றிடங் கொண்டனை பூமி யியங்க
முக்குணம் வாய்ந்த மூர்த்திக ளாயினை
நான்மறை பரவி நவில நச்சினை
முப்புர மழிய முனைந்திருங் கையிலோ
ரொன்றிய வீர்க்கணை யுயர்சரத் தூடு
முக்கோற் றேவா முகுந்த னார்ந்து
நான்முக வைய னூற்குர மிமிழ்த்து
மூவுல கொசிந்து முரல வியக்கியு
மொள்ளிய விருசுட ரோரோ ருருளையா
யிருஞாங் கரினி லியைந்தே வுழிதர
வித்திரக் குபவை யெம்மருஞ் செல்வ
செவ்வை நோக்கிச் சிறிது முள்காய்
புரவ லாற்றி முற்று மெரித்தனை
பூவிறற் றனவர் நாற்றிறப் பாஅ
டம்முக நின்பா லாறுற வாற்றவு
மருமையா மோக்க மடைந்தே வதிய
நால்வகைப் பதவியு ளுயக மென்ன
மூவரி லிருவோர் முற்றுஞ் சூழா
வொருபே றிகைத்தே யுகந்து களித்தனை
யிருளி தனக்கு மெகினந் தனக்கு
பருளது தணக்க மலையுரு வாயினை
நண்ணு முத்தமிழ் நால்வர் தமக்கு
மைம்பொறி கடிய வாறு வழங்கினை
யெவ்வினை தனக்கு மெழுவா யாகினை
பறுபதப் பெருக்க மாங்காங் கியல
வைஞ்ஞிறம் பொலியு மணிதணர் மிசைஇ
நால்வகை யிசையை நலனுறப் பாடுஞ்
சுற்றிலும் பாதபஞ் சூழ்ந்தே மன்னு
மொற்றியூர்த் தியாகனா யோங்கி வாழ்ந்தனை
மும்மலந் தணந்தனை முயங்கிடு மிருமையிற்
கலியாண சுந்தரக் கவினு மோர்பெயர்
சலியா தேற்ற சங்கர னாயினை
கொச்சைத் தேவனைக் குலவிப் பணியும்
பிச்சரி னின்றும் பிரித்தெனை யாண்ட
கருணைக் கடலெங் கண்ணுத லோயே. (சஎ)

### நேரிசைவெண்பா.

கண்ணுத லோயே கயிலைக் கிறையாயோர்
பெண்ணுருவிற் பாகங்கொள் பேரழகாய்—மண்ணுலகிற்
றேத்திரித்தே யொற்றிவளர் சோதியா யெந்நாளுங்
காத்தருள்வ துன்றன் கடன். (சு அ)

### கோச்சகம்.

கடனுனக் கேயென்று கழலடிக ளைப்பேணி
யடர்பவர்க ளெப்பதமு மடைவர்சர்வ மானியமாய்
நடமலியுந் தியாகேசர் நம்வடிவாம் பிகையுடனே
தொடர்புகொளு மொற்றியூர்த் தொல்லைநக ணைச்சேர்ந்தே.

### கட்டளைக்கலித்துறை.

சேர்ந்தாரை வாழ்விக்கு மொற்றி நகரிற் றினமுமருள்
கூர்ந்தாரை யின்று பவனியிற் கண்டு குறுகலுஞ்
சோர்ந்தாள் கலைக ணெகிழ்ந்தாள் வளைகடுணை முலைக
ளார்ந்தாள் பசலை யினியென்ன செய்குவ ளாயிழையே. (எ0)

### நேரிசைவெண்பா.

இழைநிகர்த்த நுண்ணிடையை யேய்ந்தவடி வாம்பா
டழைநிகர்த்த தன்மெய்யிற் சார —மழைநிகர்த்த
பேழ்பவனே யந்தவிர்க்கப் பெற்றதிரு வொற்றியினில்
வாழ்பவனே யெங்குலதெய் வம். (எக)

### தாழிசை.

வம்பலருங் குழல்வடிவாம் பிகைமருவு தெய்வம்
வலியகடுத் தனையருந்தி வாழ்வளித்த தெய்வ
மம்புயற்கு மச்சுதற்கு நடுநின்ற தெய்வ
மரியசெந் தமிழ்மறைக்கே யாசைகொளுந் தெய்வ
மம்பலத்தி லுலகுய்ய வாடுகின்ற தெய்வ
மடியார்க டம்மனதி லமர்ந்திட்ட தெய்வஞ்
செம்பதுமச் சரண்பணியத் திருவளிக்குந் தெய்வந்
திகழொற்றி மகிழடியிற் றியாகேச தெய்வம். (எஉ)

## இடைச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வரைநிகர்த்தமார்க்குடங்களிரண்டுடன்மோர்பாற்குடங்கள்வசமாயேந்தி
நிரைவகுத்த குசத்தியரா நும்பாலி லண்டரொலா நேசம் வைக்கத்
திரைமடுத்தவொற்றியினில்விற்றுவருமிடைச்சியரோ செப்பக்கேண்மோ
விரைமிகுத்தவாடையொழித் தரைப்பணமோ ரொற்கீயவிரும்புவேனே.

ஈற்றடிமிக்குவந்தநான்கடிக்கலித்தாழிசை.

விரும்புமடி யார்கண்மனம் வேட்டவையெல் லாமீய
வரும்பவனி கொண்டருளி யமர்ந்ததிரு வொற்றியினி
லிரும்புருவச் சங்கிலியா ரெழிலாரூ ரரைப்பிணித்த
பெரும்புகழி னைப்பாடிப் பேசிடுவோ மன்றே
பெம்மான்றியா கேசனெனப் பெரிதுவப்போ மன்றே. (எச)

வண்டுவிடுதூது.

கொச்சகம்.

நலம்விளங்கு மொற்றிநகர் நாதரது மார்பதனில்
பொலம்விளங்குங் கொன்றைமது புசித்துப்பல் புகழ்பாடிக்
கலம்விளங்குந் திருச்செவியிற் கதைத்திடுவா யென்குறையைத்
தலம்விளங்கும் பண்ணிசைகள் சாற்றிமகி ழளியினமே. (எரு)

வஞ்சித்துறை.

இனமலி யொற்றியிற்
சினமற வுற்றிடின்
மனமகிழ் நற்றவ
முனமிக முற்றுமே. (எசா)

நற்றயிரங்கல்.

கட்டளைக்கலித்துறை.

முற்றும் புனலா லுலக முடிந்து முழுகியநாள்
சற்றுஞ் சலன மடையாத வொற்றித் தனிமுதலே
யெற்று மதனன் மலரா லெய்ந்திடு மேழையவள்
பற்று மிதழி யுதவா திருந்திடல் பான்மையன்றே. (எஎ)

கலிநிலைவண்ணத்துறை.

தாந்ததன தாந்ததன தாந்ததன தாந்ததன தத்ததானனா.

பாந்தளுழை சார்ந்துதுயில் கூர்ந்தவள ரேந்தலது பக்கம்வாழலா
நோர்ந்தமனை யூர்ந்தகலை யோர்ந்தவளொ டார்ந்தவனை நித்தநாடலாந்
தேர்ந்ததரு வேய்ந்தவுல காண்டுவரும் வேந்தனது திக்கையாளலா
மோர்ந்தசுமி ழாய்ந்துசித மேன்றளவு வாழ்ந்துவரி னொற்றியூரிலே.

கொற்றியார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊரிவள ரகணிபல சூழ்ந்தடரு மொற்றியெனு மூரைநாடி
வேரிவளர் துளவணிந்து நாமமிட்டுச் சங்காழி மென்கை தாங்கும்
பாரிவள்ர் கொற்றியரோ மால்வளரும் பலவிடங்கள் பார்த்ததுண்டேல்
காரிவள ரனந்தசய னத்தலத்தைத் தரிசிக்கக் காட்டுவாயே. (எகூ)

### இஃதுமஃது.

நேரிசைவெண்பா.

வாயிடைமண் போட்டானை வானரத்தைச் சேர்ந்தானைத்
தாயிடத்து மால்கொண்ட தப்பிலியை — நீயுமால்
கொண்டனையென் றேகண்டு கொற்றியரோ தக்கபடி
முண்டனஞ்செய் தாரின் முடி. (அ0)

### மடக்கு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முடித்தார் சிரசின் மதியினையே முடித்தா ரடியார் விருப்பினையே
பொடித்தார் மூன்று புரத்தினையே பொடித்தார்வேயினிடத்தினையே
கொடித்தார் வேத நான்கினையே கொடித்தார் மூவர் தொழிலினையே
பிடித்தா ரரியி னுரியினையே பிடித்தா ரொற்றி யூரினையே. (அக)

### கார்காலம்.

தாழிசை.

ஊர்ந்துலவி மேகமெலா மழைபொழியுங் கால
மொண்பீலி மிகவிரித்து மயிலாடுங் காலங்
கூர்ந்தகுர லினையடக்கிக் குயிலொடுங்குங் காலங்
குலமாதர் குடமூலைகள் வெம்மையுறுங் கால
மார்ந்தமலர்க் கோடல்விரிந் தலர்கின்றகால
மாவணிபு ரட்டாசி யணைந்திட்டகாலஞ்
சார்ந்தபுக ழொற்றிநகர் தண்வரையி லேழை
தலைமகனைக் காணாது தனித்திருக்குங் காலம். (அஉ)

### மடக்கு.

இன்னிசைவெண்பா.

காலங் கடந்தவரைக் காலங் கடந்தவரை
யால மிடற்றினரை யால மிடத்தினரைப்
பாலத் திருக்கையரைப் பாலத் திருக்கையரைச்
சாலவொற்றி யிற்பணிந்தோஞ் சார்ந்து. (அங)

வேற்றொலிவெண்டுறை.

துன்னுந்திரைக்கடலதனிலமுதுடனேயவதரித்துந்தொண்டைநாட்டின்
மன்னுதிரு வொற்றியூ ரார்சடையி னதியுடனே வாழ்ந்து வந்து
மின்னென வனலினை வீசி யெளியனை
யின்னல்செய் தொறுத்திட லெழிலல மதியமே. (அச)

தாழிசை.

மேதினியி லருவருக்கு மிழிகுலத்திற் பிறந்திடினு
மெய்வெருவு புலைத்தொழிலை விருப்பமொடு புரிந்திடினு
மாதிபுரி நாதனையே யனவரதம் போற்றுமவ
ரழகடியை நஞ்சிரசி லணிமுடியாக் கொண்டிடுவா
நீதிமறை யோதிவரும் வேதியரோ யாயிடினும்
நீடுலகிற் கோலோச்சு நிலமன்ன ராயிடினுந்
தீதில்பர கதிய நருந் தியாகேச னொழுந்தருளுந்
திருவொற்றி யூர்வணங்கார் தீயபறைச் சாதியரே. (அரு)

கலிநிலைத்துறை.

சாமவே தப்படன நீங்காத வொற்றிநகர்ச் சங்கரனுர்
தாமமே பெற்றிடற்கங் கேதேதோ தந்திரங்கள் சாற்றியவர்
நாமமே மிக்குரைத்து மாரனவன் செய்கின்ற நலிவகற்றிச்
சேமமே யுற்றிடற்கு நன்னெஞ்சே யோரோதுஞ் செய்திலையே.

கூதிர்காலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செய்யசெங் கதிரோன்ற னொளிமழுங்கிச் சந்திரனின் செயலையொக்கப்
பெய்வளையார் கலவிகளில் விருப்பமுற்றுக் கணவருடன்பெட்பினுரக்
கொய்மதன னம்பென்ன மழைத்தாரை பொழிகின்ற கூதிர்க்கால
மெய்ம்மு தல்வன்றனைக்காணுதொற்றியூர்த்திசைநோக்கிமெலிகின்றேனே.

வலைச்சியார்.

இஃதுமஃது.

கிஞ்சுகச்செவ் வாயர்பலர் நடமுறு வொற்றிநகர்க் கிட்டி வாழுங்
கஞ்சனிகர் பார்ப்பார்க்கும் வாயூறக் கெண்டைமீன் கண்ணிற்காட்டி
மிஞ்சுமொழி வலைச்சியரே நீர்விற்று வருகின்ற மீன்கடம்முள்
வஞ்சமின்றிச் சேலையொழித் திருவாரா லெற்கீந்தால் வாங்குவேனே.

நேரிசைவெண்பா.

வேதாவு மாயவனு மென்மனைவி மார்களுடன்
போதாற் சிவகுறியைப் பூசிக்கத்—தாதாவாய்க்
காண்டற் றொழிலதனைக் காத்தற் செயலதனை
யாண்டளித்தா னொற்றி யரன் (௬௩)

### கோச்சகம்.

அரம்பழித்த விழியுமையா ளமுதுகைத்த மொழியுடையா
டரம்பகைத்த தனமுடையா டளிர்சிறத்த வடிவுடையா
டிரம்வகுத்த மனங்களிக்கத் திருவொற்றி யூரதனிற்
பரமிருத்த தியாகேசர் பவனிவரக் கண்டாமே. (௬௦)

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கண்களிக்கும் வெள்ளிமலை யிருப்பிடமாய்ப் பொன்மேருகரத்திலாரக்
கழறுமிரு நிதிக்கிழவ னேதோழ னுயருநிற் காத்து நிற்கத்
தண்களிக்கு மலையரையன் புத்திரியாஞ் செல்விவலஞ் சார்ந்துவாழத்
தகைமைபெறுமண்டமெலாமொருகொடியிற்செயிப்பவர்கடனயராகப்
பண்களிக்கும் பேய்க்கூத்தை யிடுகாட்டிற் பகலிரவாய்ப் பாடியாடிப்
பாம்பினையு மரியயர்க ளென்பினையும் பரிவுடனே பணியாப்பூண்டு
மண்களிக்கு மண்டையினி லேந்திபலி யெடுத்துசித மானம் விட்டு
மகிழொற்றி யூரிலொரு மகிழடியிற் குடிகொண்ட மாயமென்னே.

### கட்டளைக்கலித்துறை.

எந்நாளு மேசென்ம வேலைக் கிடந்துழ லேழைநெஞ்சே
மின்னாளு மம்மையப் பன்வாழு மொற்றி வியன்றலத்திற்
றென்னாதெ னாவெனப் பண்பாடிக் கள்ளுணுந்தேனளியாய்ச்
சின்னாண் மகிழ்மரஞ் சேர்ந்தாலு நன்முத்தி சித்திக்குமே. (௬௨)

### நேரிசைவெண்பா.

சிவமேமெய் யாகியவோர் தெய்வமெனத் தேர்ந்து
பவமே யொழித்திடற்குப் பார்ப்பர்—தவமிகுந்த
பார்த்தன்றன் வில்லதனாற் பட்டவடி யேயோர்ந்து
பார்த்தபெரி யோர்கள் பரிந்து. (௬௩)

## சம்பிரதம்.

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பரியவெழு கடலையுமே யுள்ளங்கை யேந்திமிகப் பரிவா யுண்பேன்
பலவண்டங்களைநொடியிற்சிறுகோலாலேயுடைத்துப்பற்பஞ்செய்வே
னரியபெருவரைகடமை யெவ்வெவருங்கண்டிட வேயசைத்துநிற்பே
னடற்சிங்கத் தனையறுகாய்ப் புலியதனைப் புல்லாக வவமதிப்பேன்
றெரிதருமிவ் வித்தைகண மாணாக்கர் பாற்கற்றோர் செய்வதாகுந்
தேர்ந்தவிஞ்சையிவையலவாங்கண்காட்டுஞ்சாலமலசெப்பக்கேண்மோ
பிரியமுடன் மனமதனி லோர்பொழுது நினைத்தவுடன் பேரானந்தப்
பெரும்பதவியருளொற்றிக்கிணையானவொருபதமும்பேசவேனோ?

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வேலனை யளித்தார் போலும் வேயினின் முளைத்தார் போலுங்
காலனை யுதைத்தார் போலுங் கரியினை யுரித்தார் போலு
மாலத்தை மடுத்தார் போலு மருமறை யிடத்தார் போலு
மோலத்தை யார்த்தார் போலு மொற்றியூ ரார்த்தார் தாமே. (௬௫)

கழிக்கரைப்புலம்பல்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்,

தாராருந் தாமந் தளிராரு மத்தந்
தளமாரு வில்வத் தனிமார்ப னொற்றிக்
காராருங் காவே கயலாருங் கழியே
கவினாருந் திரையே கலியாருங் கடலே
வாராரும் பொறியே வகையாரும் புன்னையே
வனமாருங் குருகே வலைவாரு மீனே
சீராரு மென்றன் சிறைமீண்டு வாழத்
திகழ்செல்வன் சென்ற திசைகண்டி லீரோ. (௬௬)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கண்ணையருங்கழலடியிற் களிப்புடனே யருச்சித்தகண்ணன்றன்னைப்
பண்ணரியையக்கொண்டபிரணவப்பொருட்கு விழித்திட்டபகவன்றன்னைப்
பெண்ணமலையிடத்தசிவந்தன்னிடத்தி லுதிப்பித்துப்பிறங்குங்காட்சி
தண்ணளிகள்சூழ்ந்தமகிழடியிருக்க வொற்றியிற்போய்த்தரிசிப்பாயே.

எண்சீர்வண்ணவிருத்தம்.

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான
பாவையரை யேவிரும்பி நாளுமவ ரோடுறைந்து
பாழுமன மேமெலிந்து நலியாதே
பூவலய மேலனந்த லோபிகளை யேபுகழ்ந்து
போதவறி வேயிகழ்ந்து மெலியாதே
நாவலர்க ளோடுகந்து பூதிமணி யேயணிந்து
ஞானசிவ யோகமென்று புரிவேனோ
வானவுடன் மாமுகுந்த னேடுமய னார்வணங்கு
மாதிபுரி வாழவந்த பெருமானே. (௬௮)

வெள்ளைச்சந்தவிருத்தம்.

பெருகுதிருவமிழ்துவரியொருசுதற்குப்பெயர்த்தளித்தாரொற்றியூரர்
பருகவருநமனவனையொருசுதற்குப் படுத்தொழித்தா ரொற்றியூரர்
குருகுமதி யணிசிரசையொருசுதற்குக்குணித்திகைத்தாரொற்றியூரர்
பருமுமையின்முலையமுதையொருசுதற்குப்பசித்தணித்தாரொற்றியூரர்

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒற்றியூர்த்தியாகேசருயர்பவனிதரிசித்தே ஞெண்டார்க்கொன்றைப்
பெற்றிட்டேனியாவர்களும்பெறற்கரியபெருவாழ்விற்பிறங்குகின்றேன்
வொற்றியூர் மன்மதனும் விழிக்கின்றான் கூட்டாளி விரும்புகின்றான்
பெற்றிபெறும் பாக்கியமோ நம்வாழ்விங் கெவர்க்குண்டு பேசுவீரோ.

நேரிசைவெண்பா.

பேசுதிரு வொற்றிநகர்ப் பெம்மாற்குத் தேவியா
யாசுகமாய்த் தாங்கு மணிவிடையாய்த்—தேசுற்றான்
பாணர்திரு வாய்மொழியிற் பாடப் பரிந்துவக்கும்
யாணர்வளர் நாரா யணன். (கoக)

வாழி.

தனனதன தனனதன தனனதன தானதன.

தவளநிற நிலவியொளிர் தனிவிசிதம் வாழியவே
தருவடிய ரணிகளெனும் விழிமணிகள் வாழியவே
தவமுனிவ ரருளியதொர் தமிழ்மறைகள் வாழியவே
தழைபெரிய வயிறுடைய கரிமுகவன் வாழியவே
தவனனென வெயிலிலகு மயின்முருகன் வாழியவே
தகைமையுய ரருளுருவ வுமைகவுரி வாழியவே
தவழனலின் வருபலகை வடிவிறைவன் வாழியவே
தழைமகிழ மரம்வளரு பிரமபுரி வாழியவே.

திருவொற்றியூர்க்கலம்பகமுற்றியது.

---

திருச்சிற்றம்பலம்.

